உ

சிவமயம்

திருநெல்வேலி, மதுரை, ராமநாதபுரம்,
ஜில்லா வாசிகளாகிய

# தொண்டைமான் கள்ளர்

## குலமக்கள் முதல் மகாநாட்டின்
## நடவடிக்கைகள்

1933—ம் வருஷம் மேமீ 7, 8-தேய்திகளில்
திருநெல்வேலி - வண்ணார்பேட்டையில்
நடைபெற்றது.

---

தலைவர்,

ஸ்ரீ திருநெல்வேலி, இந்து கலாசாலை, சித்திராசிரியர்
திருவாளர்.
தொண்டைமான். சி. பி. முத்தையா அவர்கள்.

---

திருநெல்வேலி,
ஹிலால் பிரஸில், பதிப்பிக்கப்பெற்றது.
1933.

# ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர்கள் கவனிக்கவேண்டிய விதிகள்.

---

தொண்டைமான் கள்ளர் குல மகாநாட்டில் நிறைவேறிய 3, 4, 5 தீர்மானங்களுக்குட்பட்டு கீழ்க்கண்ட விதிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

---

1. திருநெல்வேலி, மதுரை, ராமநாதபுரம் ஜில்லாக்களை ஏழு சர்க்கிள்களாகப்பிரித்து சர்க்கிள் ஒன்றுக்கு தெரிந்தெடுக்கப்பட்ட மெம்பர்கள் நால்வரும் மகாநாட்டுத் தலைவரால் நியமிக்கப்பட்ட மெம்பர் ஒருவரும் ஆக மொத்தம் 35 மெம்பர்கள் சேர்ந்த ஒரு கூட்டம் ஜில்லாக் கமிட்டி யென்று பெயர் பெறும். (மெம்பர்களின் விபரத்திற்கு மகாநாட்டின் 10-வது தீர்மானத்தைப் பார்க்க)

2. ஜில்லாக் கமிட்டியின் தலைமை ஆபீஸ் பாளையங்கோட்டையில் அமைக்கப்படும்.

3. ஜில்லாக் கமிட்டி மூன்று மாதத்திற்கு ஒரு தரம் கூடவேண்டும்.

4. ஜில்லாக் கமிட்டியின் அங்கத்தினர்கள் இரண்டு வருடத்திற்கு ஒரு முறை புதுப்பிக்கப்படவேண்டும்.

5. 1933, 1934-ம் வருடங்களுக்கு கீழே கண்ட விபரப்படி நிர்வாக சபை அங்கத்தினர்கள் அமைக்கப்பட்டிருக்கிறார்கள்.

(i) திருவாளர். தொண்டைமான் சி. பி. முத்தையா அவர்கள், தலைவர்.
(ii) ,, ம. சங்கரன் தொண்டைமான் அவர்கள் உதவித் தலைவர்.
(iii) ,, சி. நல்லகண்ணு தொண்டைமான், காரியதரிசி.
(iv) ,, வ. சிங்காரவேலு தொண்டைமான், உதவிக் காரியதரிசி.
(v) ,, அ. அருணகிரி தொண்டைமான், பொக்கிஷதார்.
(vi) ,, ச. சங்கரலிங்கம் தொண்டைமான், மெம்பர்கள்.
(vii) ,, சி. சு. அருணசலத் தொண்டைமான் ,,
(viii) ,, ப. பக்கிரி தொண்டைமான் ,,
(ix) ,, மூ. சண்முகம் தொண்டைமான் ,,

( தொடர்ச்சி கவர் iii, iv பக்கம் பார்க்க )

# திருநெல்வேலி, மதுரை,
## ராமநாதபுரம் ஜில்லா வாசிகளாகிய
# தொண்டைமான் கள்ளர்
## குல மக்கள் முதல் மகாநாடு

[7, 8–5–33 ஞாயிறு, திங்கட்கிழமைகளில், திருநெல்வேலி, வண்ணார்பேட்டையில் நடைபெற்றது.]

---

### கடவுள் வணக்கம்.

அங்கிங் கெனுதபடி யெங்கும்ப்ர காசமாய்
ஆனந்த பூர்த்தியாகி,
அருளொடு நிறைந்த தெது, தன்னருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடியெலாம்
தங்கும் படிக் கிச்சை வைத்து உயிர்க் குயிராய்த்
தழைத்த தெது, மனவாக்கினில்
தட்டாமல் நின்ற தெது, சமய கோடிகளெலாந்
தந்தெய்வம் எந்தெய்வம் என்று
எங்கும் தொடர்ந்து எதிர் வழக்கிடவும் நின்றதெது,
எங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்ல வொரு சித்தாகி இன்பமாய்
என்றைக்கு முள்ளதெது, மேல்
கங்குல் பகலற நின்ற எல்லையுள தெது, அது
கருத்திற் கிசைந்ததது வே
கண்டவெ லாமோன வுரு வெளியதாகவும்
கருதி அஞ்சலி செய்குவாம். (தாயுமானவர்.)

---

தொண்டைமான் கள்ளர் குல மக்களே! சகோதரர்களே!!

நம் நாட்டில், தற்போது சமூக முன்னேற்றம் என்னும் வெள்ளம் கரைபுரண்டோடுகின்றது. அவ்வெள்ளம், பாவிப் பெருகாத இடம் ஒன்றுமில்லை. தாழ்த்தப்பட்ட மக்களெல்லாம் தலை தூக்கி, முன்னேற விரைகின்றார்கள். இக்காலத்தே பண்டை குலப்பெருமை வாய்ந்த நம் ''தொண்டைமான்கள்ளர்''

குலத்தினர் மட்டும் வரிதே இருப்போமேயானால், சமூக முன்னேற்றம் என்னும் வெள்ளத்தால் அலைப்புண்டு வீழ்வது திண்ணம். ஆதலின் சகோதரர்களே விழித்தெழுங்கள்! நாமும் நமது சமூகமும் முன்னேறுவதற்குரிய சாதனங்களை, நமது குல அபிமானிகளின் பலரது பெரு முயற்சியால், சென்ற 1933-ம் வருஷம் மேமீ 7, 8 தெய்திகளில் ஞாயிறு, திங்கட்கிழமைகளில், திருநெல்வேலியை அடுத்த வண்ணார்பேட்டையில் ஸ்ரீமான் குப்பா ரெட்டியார் அவர்கள் பங்களாவில் கூடிய மகா நாட்டில், அறிஞர் பலர் எடுத்துக் காட்டியிருக்கின்றனர். அப்பெரியார் பலர் காட்டிய வழி பற்றி ஒழுகினால் நாம் மேன்மையுறுவதில் சந்தேகமில்லை. அம்மகா நாட்டின் நடவடிக்கைகளை எல்லோரும் அறியவே இச்சிறு புத்தகம் வெளியிடலானோம். மகா நாட்டின் நடவடிக்கைகளையும், அம்மகா நாட்டில் நிறைவேறிய தீர்மானங்களையும் எடுத்துக் கூறுமுன், நமது பண்டைக் குலத்தின் உயர் நலங்களைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் கூறுவது மிகையாகாது.

## குலத்தின் உயர் நலம்.

---

தொண்டைமான் குலமானது பண்டைக்காலந்தொட்டே மிகச் சீரும் சிறப்பும் பொருந்தியது. பூர்வம், இராஜ ராஜ சக்கிரவர்த்தியாய் சோழ நாடாண்ட கோப்பெருங்கிள்ளிச் சோழனுக்கும், நாக கன்னிக்கும் பிறந்த ஆதொண்டைப் பெருமானே நம் குலமுதல்வன். ஆதொண்டைமாலை புனைந்துவந்த அத்தோன்றலை, "தோண்டைமான்" என சோழ மன்னன் விளித்து தனது சோழ நாட்டை இருகூறாக்கி, அவற்றில் வடசோழத்தை ஆதொண்டையனுக்கு உரிமையாக்கி, அரசுரிமை யெய்துவித்தான். ஆகவே ஆதொண்டையன் தொண்டைமானாய், வடசோழ நாட்டை காஞ்சிமா நகரத்தை தலைநகராகக் கொண்டு, ஆண்டுவந்தான். தொண்டைமான் ஆண்ட நாடே தொண்டை மண்டலம் என்றும் தொண்டை நாடு என்றும் வழங்கி வந்ததென்பது சரித்திர ஆராய்ச்சியாளரும், கற்றோரும் ஒப்புக்கொண்டதொன்று. ஆதொண்டைப் பெருமான், சக்கிரவர்த்தியாய் முடி புனைந்து தொண்டைமண்டலத்தையாண்டு வருங்கால், அந்நாட்டின் எல்லைப் புறங்களான, பதவேடு, மகேந்திரவாடி, ஆம்பூர்பேட்டை முதலிய விடங்களில் காட்டரண் விளைந்து வாழ்ந்து வந்தவரும், பலகால் சோழரோடு போர் செய்து மதமிஞ்சியிருந்த வருமான, குறும்பர் தம்குறும் படக்கி, சோழலிங்கபுரம் முதலிய நகர்களை நிர்மாணித்து, மாபுலங்காக்கும் மன்னவன் இவனே யெனப் பலரும் போற்றும் பெருமையுடையவனானான். இவனும், இவன்றன்

கால்வழி வந்தவர்களான, தொண்டைமன்குல மக்களும் வாழ்ந்த தொண்டை நாட்டின் பெருண்மையை, நம் நரைமூதாட்டியாம் ஔவைப்பிராட்டி, "தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடு சான்றோருடைத்து" என வியந்தோதுகின்றாள். இம்மக்களின் தொன்மை சான்ற நாகரீகம் சங்கமருவிய அகநானூறு, புறநானூறு, பத்துப்பாட்டு முதலிய பெருநூல்களில் சிறப்புடன் எடுத்தோதப் பட்டிருக்கின்றது.

பத்துப்பாட்டில் ஒன்றாகிய பெரும் பாணாற்றுப் படையில் மூவேந்தரும், பாவேந்தரும், காவேந்தராம் குறும்பரும், போற்றச் சக்கரவட்டக்குடை நிழற்கீழ் நீதிபோங்கச் செங்கோல் செலுத்தி, திருமுல்லைவாயில், திருப்பதி, திருக்காஞ்சி, திருவல்லிக்கேணி முதலிய தெய்வ க்ஷேத்திரங்களில் பேரறம் வளர்த்துக் கரங்குவித்த தோண்டைமான் இளந்திரையனது பெருமை விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இவன்றன் படைக் கலச்சிறப்பும், போர்த்திறனும், ஆண்மையும், அருளும், கற்றோர் கருத்தைக் கவரும் தன்மை வாய்ந்தன.

"முறை வேண்டுநர்க்கும், குறை வேண்டுநர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினர்க்கருளி
இடைத் தெரிந்துணரும் இருடீர் காட்சிக்
கொடைக் கடனிறுத்த கூம்பா உள்ளத்து
உருப்பில் சுற்ற மோடிருந்தோன்"

என்று பெரும் பாணாற்றுப் படையில் புகழ்ந்து கூறப்பட்டுள்ள முறையொன்றே இவன்றன் பெருமைக்குப் போதிய சான்றாகும். இன்னும் செங்கற்பட்டு ஜில்லாவில் இருக்கிற திரையன் ஏறி இவன் வெட்டிய ஏரியென்பது சரித்திரவாயிலாகக் கிடைத்த ஓர் ஆதாரமாகும். இம்மட்டோ, கலம்பகம் பாடிய பின்னவனுக்கு, நலம்பலபேசித் தன்னுடைந்து காட்டமேறிப் பொன்னுடேகிய நந்தியம் பெருமா னென்ன! பன்னகருக்கும் முன்னகராக விண்ணகர் நிருமாணித்த சாமந்தநாராயனென்ன!! இவர்தம் பெருமையை சங்கமருவிய பெருங் காப்பியங்களன்றோ போற்றிப் புகழ்கின்றன.

இன்னும் சோழ அரசனான இரண்டாம் குலோத்துங்கன், உறைந்தப் பதியைவிட்டுக் காஞ்சியம்பதியையே பகைவர் அஞ்சும் அம்பதியாய்க்கணித்து, தொண்டைமண்டலத்தைக் கவர்ந்தாண்ட காலத்துக் கலிங்கநாட்டார் வலிமைபேச, அவரைத்தடுக்க வகையின்றித் தயங்கும் போது கண்டநாடுகொண்டு கொண்டநாடுவிடாது கைப்பற்றும் வீரசிம்மமாகிய வண்டையூர் அதிபன் கருணாகரத் தோண்டைமான், அவர்மேல் படைகொடு சென்று

மானங்காத்தார். அப்பெருமையையன்றோ, ஜெயங்கொண்டார் கலிங்கத்துப்பரணியில் அழகாய் எடுத்துரைக்கின்றார். இவன்றன் போர்த்திறனை கவிஞர் அழகொழுக எழுதியமைக்கும் முறை கற்றார் உளத்திற்கு களிபேருவகை தருவதாகும்

"கடற்கலிங்க மெறிந்து சயத்தம்பம் நாட்டி
கடகரியும் குவி தனமும் கவர்ந்து தெய்வச்
சுடர் படை வாளபயனடி அருளினேடும்
சூடினான் வண்டையர்கோன் தொண்டைமானே"

என்பது கலிங்கத்து பரணியில் காணும் ஓர் கனிந்த செய்யுளாகும். இன்று, தஞ்சாவூர் ஜில்லாவில், பெரு நிதிபடைத்தவரும், கள்ளர் குலத்திற்கே ஓர் அணிகலமாயும் விளங்கும், பூண்டிப் பிரபு. ஸ்ரீமான். அ. வீரைய்யா வாண்டையார் அவர்கள், இவ்வண்டை நகரதிபனும் கருணாகரத் தொண்டைமானின் கால் வழிவந்தவர்களேயாவர். ஆகவே கள்ளர் குலப் பெருமை யெல்லாம் தொண்டைமன் குலப் பெருமையே யாம் என்பது பெற்றாம்.

இவ்விதம், வீரராய் விளங்கிய மக்கள், நாளடைவில், பதியிழந்து, படைத்த நிதியிழந்து, வலியிழந்து நலிந்தனர் மெலிந்தனர். தன்னயம் மேவிட்ட சோழர், தொண்டை மண்டலத்தில், தம் தாயத்தார் பகை காரணமாய் வஞ்சமாய்க்குடியேறி, தம் நாட்டோடு முந்நாட்டையும் கவர்ந்த காலத்து, தொண்டை மன்னரும் அவர் தம் மக்களும் கிழக்கரையை யடுத்த தொண்டி நகரை ஸ்தாபித்து பன்னாட்டாரோடு வெற்றி பெறச் சமர் புரிந்து களமர் என்று பெயர் புனைந்து நிற்க, அந்தோ! நாளடைவில், பாஷையின் திரிபால் கள்ளர் எனும் பெயருக்கிலக்காகி நின்றனர். தொண்டி நகரை நிருவிய மக்கள் பன்னாட்டாரோடும் வியாபாரம் செய்து, அத்துறையில் முன்னணியில் நின்றதை அறிந்த ஆங்கிலர், இவர்தம் நட்புரிமை யெய்த விரைந்தனர். ஆங்கிலேயருக்கும், பிரெஞ்சுக்காரருக்கும் நடந்த சண்டைகளில், தென்னாட்டுப் போர்க்களங்களில், ஆங்கிலேயர், நம் மக்கள் உதவியை நாடினர். இவர்களும் அவர்களுக்கு உற்ற துணைவராய் இருந்து, அவர்கள் வேண்டும் உதவி காலமறிந்து செய்த காரணத்தால், ஆங்கில மக்கள் தம் அரசுரிமையை இந்நாட்டில் நிலை நிறுத்திய காலத்து இவர்கட்கென ஒரு நாட்டையும் அந்நாட்டின் அரசுரிமையையும் நல்கினர். அவ்வாறு ஆங்கிலேயர் நட்புரிமையால் கிடைத்த நாட்டில் புதிதாகக் ஒரு கோட்டையைக் கட்டி, தாம் இழந்த பெருமையினைத் திரும்பவும் பெற விரைந்தனர். அவ்வாறு புதிதாகக் கட்டிய கோட்டைதான், இன்று புதுக்கோட்டை என்னும் பெயரோடு தொண்டைமன்னர் அரசுரி

மையில் இருந்து வருகின்றது. சேர சோழ பாண்டியர் என்னும் முத்தமிழரசர் தம்புகழ் நிறுவிய தமிழ்நாட்டில் இன்றளவும், தமிழரசாயும் ஆங்கிலேயர்க்கு ஒரு சிறிதும் இறை செலுத்தாத பெருமை வாய்ந்தாயும் விளங்குவது நம் புதுக்கோட்டை அம் சொன்றேயாகும் என்பதை யாவரும் அறிவர். புதுக்கோட்டை யில் ஆண்டமன்னர் பெருமையை விரிக்கப்புகின் காலமும் இட மும், இடந்தராதென அஞ்சுகின்றேம். (வேண்டுவோர் புதுக் சீமைச் சரித்திரம், கள்ளர் சரித்திரம் பார்க்க)

இவ்வாறு புதுக்கோட்டையில் ஆண்டுவந்த அரசர்களில் சிலர் தென்னுடாகிய பாண்டியநாட்டில் க்ஷேத்திர வாசம் செய்து தென்காசி சன்னிதி மடாலயம் திருச்செந்தூர் மடாலயம் முத லிய பெரும் அற நிலைக்களங்களை ஸ்தாபித்து தம் தொண்டை மன் குலமக்களை இந்நாட்டிலும் குடியேற விடுத்தனர். அவர் தம் வழித் தோன்றல்களாகவே, இங்குள்ள "தோண்டைமான் கள்ளர்" பலர் இருக்கின்றனர் இதனை நன்கு வலியுறுத்துவன மடாலயச் செப்புப் பட்டயமும், சரித்திர ஆராய்ச்சியும் சிலா சாசனங்களும் ஆகும்.

## புதுக்கோட்டை அரசரைக் கண்டது.

---

இவ்வாறு தம் தம் புகழுடம்பு நிருவிய அரசர் பெரு மக்கள் வழியில் வந்த "தோண்டைமான் கள்ளர்" குல மக் கள் காலா வதியில் க்ஷீணகதியடைந்து, தாங்கள் ஏற்றுக் கொள் ளப்படாத தொழில்களையும், பிரவர்த்திகளையும் உடையவர் களாய், சிதறுண்டு போய்த் தாழ்ந்த நிலைக்கு வந்துவிட்டனர். நமது குலத் தலைவரான, 'புதுக்கோட்டை தோண்டைமான்' அரசர் இருக்குமிடத்தையும், நாம் வாழும் இடத்தையும் நூற் றுக் கணக்கான மைல்கள் பிரித்தமையினுலே, நாம் நம் குறை களை அவரிடத்து எடுத்துச் சொல்லவும், அவர் நம் குறைகளைக் களையவும் இயலாது, வரிதே காலம் வீணுயது. நம் பூர்வ சரித் திரம் நமக்குத் தெரியாமையாலே, நரிக் கூட்டத்தில் வளர்ந்த சிங்கக்குருளையென நம்மை நாமே கீழ்ப்படுத்திக்கொண்டோம். ஆனுல் சென்ற 1923-ம் வருஷம் ஜூலை மாதத்தில் நமது குலத் தலைவரும், புதுக்கோட்டை அரசருமான, மகாராஜராஜ, ராஜ கெம்பீர பிரகதாம்பதாஸ மார்த்தாண்ட பைரவத் தோண்டை மான் பகதூர் G. C. I. E. அவர்களின் அருமைச் சகோதரரும் புதுக்கோட்டை அரசப் பிரதிநிதியுமான ஸ்ரீமான், விஜய ரகுநாத துரை ராஜா அவர்கள், B. A. (Regent Saheb of Pudu-cottah) தென்காசியைச் சேர்ந்த குற்றுலத்திற்கு விஜயம் செய்

தார்கள். அக்காலத்தே நம்மக்கள் அனைவரும் ஒன்றுகூடி, நமது குலத்தலைவரைக் காணச் சென்றோம். உபசாரப் பத்திரம் ஒன்றும் வாசித்துக் கொடுத்தோம். பல நாளாய் பிரிந்திருந்த மக்களும் மன்னரும் ஒருவரை யொருவர் கண்டு கழிபேரு வகை யெய்தினர். தாய் முகம் காணுச் சேய்போல் வாடிய நாம், அரசர் பெருமானைக் கண்டு மகிழ்வுற்றோம். நமது குறைகளை யும், உலக சமுதாயத்தில் நமது நிலையையும் மன்னர் மன்னனுக்கு எடுத்துரைத்தோம். நமது குறைகளையுணர்ந்த மன்னனும், அக்குறைகளை நிவர்த்திக்க தன்னாலியன்ற உதவி புரிவதாக வாக்களித்தார்.

## புதுக்கோட்டை சென்றது.

குற்றாலத்தில் கண்டு நமது குல முறையையும், நமது குறையையும் அறிந்த அரசர் பெருமகன் புதுக்கோட்டையில் வருடமொரு முறை நடக்கும் நவராத்திரி உற்சவத்திற்கு வந்து **பிரகதாம்பாள்** என்னும் அம்பிகையில் அருள் பெற்றுப்போகுமாறு பணித்தனர். அரசர் பெருமகன் விடுத்த கட்டளைக் கிணங்கி இங்கிருந்து சுமார் அறுபது பெயர் வரை புதுக்கோட்டைக்குச் சென்றோம். மன்னவன் மனைநோக்கி வந்த மக்களை அரசர் பெருமகன் அன்போடு ஏற்று கோட்டையினுள்ளே இருக்கும் வடக்கரண்மனையிலே வேண்டும் சௌகரியங்கள் பலவும் அமைத்துக் கொடுத்து ஆதரித்த பெருமையை நாம் மறக்கும் திறத்தினரோ! 'மற்றும் மன்னர், 19—10—23 தெய்தியன்று புதுக்கோட்டை சென்ற மக்களனைவருக்கும், அரண்மனையில் தர்பார் மண்டபத்தில் பேட்டியளித்து, அவர்கள் எடுத்துச் சொன்ன குறைகளை எல்லாம் கேட்டு, அவைகளுக்கு வேண்டும் பரிகாரங்கள் செய்ய ஏற்பாடு செய்வதாய் வாக்களித்தார். அவ்வமயம் நம் மக்களும் மன்னனைக் கண்ட உவகையால், திருநெல்வேலி, தொண்டைமான் சி. பி. முத்தையா அவர்கள் இயற்றிய **"மேய்க்கீர்த்தி"** யொன்றை, வெள்ளிப் பேழையுள் அடக்கம் செய்து அதை நமது ஞாபகமாகக் கொடுத்தனர். அதை மன்னரும் உவந்தேற்றுக்கொண்டார். இவ்வாறு பல நாளாய்ப் பிரிந்திருந்த மக்களும் மன்னனும் ஒன்று கூடிய நாள் நமது **"தோண்டைமான் கள்ளர்"** குல சமூகத்திலேயே புனிதமான ஒரு தினமாகும். இங்கிருந்து புதுக்கோட்டைக்குச் சென்ற எளிய மக்களுக்கு, வசிக்க வீடும், உழுதுண்டு வாழ நிலமுங் கொடுத்து ஆதரித்தார். நம் மக்கள் புதுக்கோட்டைக்கு வருவதாயிருந்தால் அவர்களது கல்விப் பயிற்சிக்கு வேண்டிய பொருளுதவி செய்வதாக வாக்களித்தார். இன்னும் இதுபோல் மக்

களுக்கு வேண்டும் உதவிகள் செய்ய எப்பொழுதும் தயாராயிருந்தார். ஆனால் நாமொன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைத்தது. நமது மன்னர் பெருமானன "ராஜ மார்த்தண்ட பைரவத் தொண்டைமான்" மேனடு சென்றிருந்த இடத்தில் உயிர் துறந்தார். தனது பின்னவனைத் தேடி முன்னவனன விஜயரகுநாத துரை ராஜரும் விண்ணடைகினர். பல நாளாய்ப் பிரிந்த மக்கள் ஒன்று சேர்ந்தும் அவ்வாறு சேர்ந்ததன் பலன் கைவரப் பெறுமுன்னமேயே தம்மை ஆதரித்த வள்ளல்களை இழந்தனர். இது நாம் செய்த தவக்குறையே யன்றி வேறன்று. தற்போது, புதுக்கோட்டை அரசராக அமைந்து விழங்கும் மகாராஜராஜ ராஜகெம்பீர ராஜகோபாலத் தொண்டைமான் அவர்கள், இளவயதினர். அவர்கள் பன்னெடுநாள் வாழ்ந்து நமது குல மக்களை ஆதரிப்பார்கள் என்ற நம்பிக்கை நமக்குத் திடமாக உண்டு. எல்லாம் வல்ல இறைவன் அவ்வாறே அருள் பாலிப்பானக.

## மன்னர்குடி கள்ளர் மகாநாடு.

---

இவ்வாறு புதுக்கோட்டை மன்னருடன் சேர்ந்து நம்குலப் பெருமையை நிலைநாட்டியபொழுது தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்த மன்னர்குடித் தாலுகாவில், திருவாளர் சுவாமிநாத மாதராயர், திருவாளர் அ. வைத்தியலிங்கம் போய்ந்தராயர் இவர்களது பெரு முயற்சியால் "கள்வர் கோமான்" என்னும் பெயர் பூண்ட பத்திரிக்கை யொன்று வெளிவந்தது. இப்பத்திரிக்கை செய்த தொண்டின் பலனக, மன்னர்குடித்தாலுகா, கோப்பெருங்கள்ளர் குலப்பெருமக்கள், பூண்டிப்பிரபு திருவாளர் அ. வீரைய்யா வாண்டையார் அவர்கள் தலைமையில், மகாநாடு, ஒன்றைக்கூட்டினர்கள். அம்மகாநாட்டை நடத்துவதற்கு காரணமாயிருந்த திருவாளர் அ. ரே. மாரியப்ப மல்லிகோண்டார் அவர்களும் திருவாளர் ஓசைவாண்டையார் அவர்களும், நம்மவரை, மகாநாட்டில் வந்து கலந்து கொள்ளும்படி பணித்தார்கள். அவர்கள் விரும்பியபடி நம்தொண்டைமான் கள்ளர்குலமக்கள் சிலர் அம்மகா நாட்டுக்குச் சென்றனர். இங்கிருந்து சென்றவர்களில், திருவாளர் தோ. மு. பாஸ்கரத்தொண்டைமான் அவர்கள் B. A. "கள்வர் குலத்தின் உயர்நலம்" என்றும் பொருள் பற்றி ஒரு பெரிய சொற்பொழி வாற்றினர்கள். அச்சொற்பொழிவைக்கேட்ட தஞ்சைக் கள்ளர் குலமக்கள் அனைவரும், தொண்டைமான் கள்ளர் குலமக்களின் பெருமை யுணர்ந்தவர்களாய், இங்கிருந்து சென்ற பிரதி நிதிகள் அனைவரையும் பொன்னேபோல் போற்றி அவர்கட்கு வேண்டும் நலங்கள் பலவும் அமைத்துக்

கொடுத்தனர் "திருநெல்வேலிப் பிரதிநிதிகள்" எல்லோருக்கும் சிறந்த மரியாதைகள், வழங்கினர். இவ்வாறு நம் மக்களில் சிலர், மன்னார்குடித் தாலுகா கோட் பெருங்கள்ளர் குலப்பெருமகாநாட்டிற்குச் சென்று நமக்கும் அவர்கட்கும் உள்ள தொடர்பை உறுதிப்படுத்தித் திரும்பினர். இம்மகா நாட்டிற்கு சென்று திரும்பிய திலிருந்தே, நம் சமூக முன்னேற்றத்திற்கும், ஒருமகா நாடு கூடுவது அவசியமெனக் கருதிப்பலர் உழைத்து வந்தனர். அவ்வெண்ணம் இதுவரை முற்றும் பெறாதிருந்ததற்குக்காரணம், நம்மவர்களுக்குள் ஏற்பட்ட ஒற்றுமைக் குறைவும், போதுமான பணமின்மையுமே யாகும்.

## தொண்டை மான் கள்ளர் முதல் மகா நாடு.

ஆனால் பலநாளாய் நம்மவர் எண்ணிய எண்ணம் கைகூடும் காலமும் கிட்டியது. பாளையங்கோட்டைத் திருநெல்வேலியிலுள்ள குல அபிமானிகள் சிலரது பெரு முயற்சியால், தொண்டைமான் கள்ளர் குல மக்களின் முதல் மகாநாடு, 1933-ம் வருஷம் மேமீ 7, 8 தெய்திகளில் திருநெல்வேலியை யடுத்த வண்ணார் பேட்டையில் ஸ்ரீமான் குப்பா ரெட்டியார் அவர்கள் பங்களாவில், திருநெல்வேலி, இந்துகலாசாலை சித்திராசிரியர் திருவாளர் தொண்டைமான் சி. பி. முத்தையா அவர்களின் தலைமையின்கீழ் நடை பெற்றது. திருநெல்வேலி, மதுரை இராமநாதபுரம் ஜில்லாக்களிலுள்ள பலஊர்களிலிருந்தும், சுமார் 500 பிரதிநிதிகள் வரை மகா நாட்டிற்கு வந்திருந்தனர் மகாநாடு மிகவும் சிறப்பாக நடைபெற்றது.

## மகாநாட்டின் நடவடிக்கைகள்.

7—5—33. ஞாயிற்றுக்கிழமைப் பகல் 2-30 மணிக்கு மகாநாடு ஆரம்பமாயிற்று. கல்லிடைக்குரிச்சி. திருவாளர். ந. சு. வீரபத்திரத்தொண்டைமான் அவர்கள், திருநெல்வேலி. திருவாளர் தொண்டைமான் சி. பி. முத்தையா அவர்களை தலைமை வகிக்கும்படி பிரேரேபித்தார்கள். அப்பிரேரேபணையை திருநெல்வேலி திருவாளர் ப. பக்கிரித்தொண்டைமான் அவர்கள் ஆமோதித்தார்கள். மகாநாட்டின் தலைவர், கரகோஷங்களினிடையே ஆசனத்தமர்ந்தார். தெய்வவணக்கம் முடிந்ததும், தலைவர் தன் முன்னுரையில் "தொண்டைமான் கள்ளர்" குலமக்களின் பண்டைப் பெருமையையும், அவர்கள் தற்போது அடைந்துள்ள தாழ்ந்த நிலையையும், அவ்வாறு அவர்கள் தாழ்ந்த நிலை யெய்திய தற்குரிய காரணங்களையும், விளக்கமாய் உரைத்ததுடன், இத்

தகைய மகாநாடு நடத்த வேண்டிய அவசியத்தைப்பற்றியும், நமது சமூகம் முன்னேற வேண்டுவதற்குரிய வழிகளையும் விரிவாக எடுத்துரைத்தார்கள். தலைவர் முகவுரைப் பிரசங்கத்திற்குப்பின் குல அபிமானிகளில் பன்னிருவர், "தோண்டைமான கள்ளர் குல முன்னேற்றம்" என்னும் பொருள்பற்றி விரிவாகப் பேசி அவரவர்களுக்கு தோன்றிய முறையில் அரிய ஆலோசனைகளைத் தந்தீர்கள்.

முதன் முதலில், கல்லிடைக்குரிச்சி திருவாளர். ந. சு. வீர பத்திரத் தோண்டைமான் அவர்கள், நமக்குள் ஒற்றுமை யேற்பட வேண்டிய அவசியத்தைப் பற்றியும் சமூக முன்னேற்றத்தில் முனைந்து வேலைசெய்ய வேண்டியதைப்பற்றியும் விரிவாக எடுத்துரைத்துப் பின்னர் தான் மதுரையை யடுத்த மேலூருக்குச் சென்று அங்குள்ள கள்ளர் குல மக்களுடன் கலந்து வந்த முறைகளையும், அங்குள்ள அம்பலகாரர் இவர்கட்கு செய்த மரியாதைகளையும் எடுத்துக் கூறினார்கள். இதற்குப்பின். மதுரையிலிருந்து வந்த திருவாளர் கோவிந்தன் சேர்வை அவர்கள், தொண்டைமான் கள்ளர்களின் பெருமை வடநாட்டில் விசேஷமாக விளங்குகின்றது என்றும் "தோண்டைமான்" என்ற பதமே, கள்ளர் குல மக்களுக்குரிய பல பட்டப்பெயர்களிலும், பெருமை வாய்ந்ததொரு பட்டமென்றும் கூறி நம்மக்கள் ஒற்றுமையுடையவர்களாய் குல நலம் பேணவேண்டுவது அவசியம் என்பதை வலியுறுத்திப்பேசினார்கள்.

இதன் பின்னர். திருநெல்வேலி. திருவாளர் தோ. மு. பாஸ்கரத்தோண்டைமான் அவர்கள், B. A. தொண்டைமான் கள்ளர் குல மக்களின் பண்டைக் குலப்பெருமையை எடுத்துக் கூறும் முறையில், தொண்டைமண்டலத்தையாண்ட அரசர் பெருமக்களான, ஆதொண்டைப் பெருமான், இளந்திரையன், நந்தியம் பெருமான், சாமந்த நாராயணன், கருணாகரன், முதலியவர்களின் பெருமையை எடுத்துரைத்து, இத்தகைய பெருமக்களின் கால்வழியில் வந்தவர்களான நாம், நம்மில் கல்வியறிவு ஒழுக்கங்களில் குன்றியவர்களாய் ஒற்றுமை யற்றவர்களாய் வாழ்வது மிகவும் கேவலம் என எடுத்துரைத்தார்கள். இத்துடன், 1929-ம் வருஷம். மன்னார்குடித்தாலூகாவில் நடந்த கோப்பெருங் கள்ளர் குலப்பெரு மகாநாட்டிற்கு நம் நாட்டுப்பிரதிநிதிகள் சென்று கலந்து கொண்ட விபரங்களையும் விளக்கமாக எடுத்துரைத்து, பண்டைக் குலப் பெருமையை நிலை நிறுத்த வேண்டுவது ஒவ்வொரு தொண்டைமானது கடமையாகும் என்றும் குறித்தார்கள்.

இதன் பின்னர் பேசிய வீரவநல்லூர் திருவாளர் அ. பிச்சக்காரத்தோண்டைமான் அவர்களும், பாளையங்கோட்டை திரு

வாளர் அ. அருணகிரிதோண்டைமானவர்களும், நமக்குள் ஒற்றுமையேற்பட வேண்டிய அவசியத்தையும், நாம் கல்வி அறிவு ஒழுக்க முடையவர்களாய், முன்னிருந்த நன்னிலை யெய்துவதற்குரிய ஒழுக்க முறைகளையும் திருக்குறள் முதலிய நூல்களின்றும் பலமேற் கோள்கள் எடுத்துக்காட்டி விளக்கினார்கள்.

இவர்களுக்குப்பின், சேர்மாதேவி. திருவாளர் அ. பேச்சிமுத்துத்தோண்டைமான் அவர்கள் குல முன்னேற்றத்திற்குரிய வழிகளை எடுத்துக்கூறியதுடன், சின்னாட்களுக்கு முன், சொக்கநாதம்புத்தூரிலிருந்த நமது தொண்டைமான் குல மக்களைப் பிறசாதியினர் தாழ்வாக மதித்து அவர்களை ஊர்ப்பொதுக்கிணற்றில் தண்ணீர் எடுக்கக் கூடாதென்று தடுக்க, நமது மக்கள் வீரம் குன்றாதவர்களாய், நமது குலப்பெருமையை ஆதார பூர்வமாக, நியாய சபையிலேயே நிலை நிறுத்தினர்கள் என்ற விபரத்தையும் எடுத்துரைத்தார்கள். அதன் பின்பேசிய கல்லிடைக்குரிச்சி திருவாளர் இராமசாமிதோண்டைமான் அவர்களும், ஸ்ரீவைகுண்டம் திருவாளர் சுப்புத்தோண்டைமான் அவர்களும், கருங்குளம். திருவாளர் வெள்ளையாதோண்டைமான் அவர்களும், நம் மக்களில் சிலர், நமது குலப்பெருமைக்கு ஒரு சிறிதும் அடுக்காத, சுண்ணாம்புத் தொழிலையும், மேளத்தொழிலையும் செய்து வருகின்ற காரணத்தால் தான் நமக்கு தென்னாட்டில் சிறப்பில்லையென்றும், அதனாலே அத்தொழில்களை, கூடியவரையில் விட்டு விடப்பிரயாசைப்படவேண்டும் என்றும் இனிமேல் நமது குழந்தைகளை யாவது கல்வி கற்று உயரிய ஒழுக்க முடையவர்களாய் அமையும்படி வளர்க்க வேண்டும் என்றும் எடுத்துரைத்தார்கள்.

இதன்பின் பேசிய ஸ்ரீவைகுண்டம் திருவாளர் பாலையாத் தோண்டைமான் அவர்கள், தொண்டைமான்கள்ளர் குலமக்களுக்கும், ஸ்ரீவைகுண்டம் கோட்டை வேளாளர்களுக்கும் உள்ள தொடர்பை விளக்கி, நம்மூதாதையர் தென்காசிச் சன்னிதி மடாலயம் முதலிய அறநிலைக் களங்களை ஸ்தாபித்து அதற்கு தாமிர சாஸனம் முதலியன ஏற்படுத்தியதையும் விளக்கிக்கூறி குலமக்களின் பெருமையை நிலை நாட்டினார்கள்.

இதன் பின் பேசிய, தூத்துக்குடி, சுப்பிரமணியத் தோண்டைமானவர்கள் தான் பொன்னமராவதிப்புதூரில் இருக்கும் போது மற்ற மக்கள் நம் தொண்டைமான் குலமக்களைப் போற்றியமுறையையும், நம்மக்கள் ஏற்றுக்கொள்ளத்தகாத தொழில் முறைகளை உடையவர்களாய் அமைந்ததொரு காரணத்தாலேயே நமது குலப் பெருமை குன்றியதென்றும் அக்குலப்பெருமையைக் காப்பாற்றவேண்டுவது தன்னைப்போலொத்த இளஞ்சிங்கங்களின் கடன் என்றும் வலியுறுத்தி வீரவுரைகள் சில நிகழ்த்

தினர். இவர்கட்குப்பின் பேசிய தென்காசி, சி. பூதத்தான் தோண்டைமான் அவர்கள், நம்மக்கள் ஏற்றுக்கொள்ளத்தகாத தொழில் முறைகளை உடையவர்களாய் மட்டும் அமையாமல், அவர்கள் அதில் ஒழுக்கம் குன்றியவர்களாயும் அமைந்துள்ளார்கள் என்றும், அதனால் பிறமக்கள் நம்மக்களை மிகவும் கேவலமாக மதிக்கின்றார்கள் என்றும், நாம் அதற்கெல்லாம் இடங்கொடாமல் ஒழுக்க சீலர்களாய் வாழவேண்டும் என்றும் விரிவாகவும், மிகவும் ஆத்திரத்துடனும் எடுத்துரைத்தார்கள்.

இவ்வாறு பன்னிருவர் பேசியவிஷயங்களையும் தொகுத்து, தலைவர் அவர்கள் முடிவுரை கூறியதும் மாலை 5-30 மணிக்குக் கூட்டம் கலைந்தது. கலைந்த கூட்டம் மறுபடி மாலை 7 மணிக்குக் கூடி, மகாநாட்டின் காரியக்கமிட்டியார் தீர்மானித்த தீர்மானங்களை நிறைவேற்ற ஆரம்பித்தது. மகாநாட்டில் எழுந்த தீர்மானங்களில் எல்லாம் மிகவும் முக்கியமானது, நம்மவர்கள் எல்லோரும் ஒற்றுமையுடையவர்களாய் வாழ வேண்டுதற்குரிய சாதனங்கள் அமைத்ததேயாகும். திருநெல்வேலி, மதுரை, இராமநாதபுரம், ஜில்லாக்களை மொத்தம் ஏழு சர்க்கிள்களாகப் பிரித்து ஒவ்வொரு சர்க்கிளுக்கும் 5 பிரதிநிதிகள்வீதம் மொத்தம் 35 பிரதிநிதிகள், தொண்டைமான் கள்ளர் குலமக்களின் பொதுக்காரியங்களை கவனிப்பதென்றும் இவர்கள் மூன்றுமாதத்திற் கொருமுறை கூடி சமூக முன்னேற்றத்திற்கு வேண்டும் காரியங்களை செய்வதென்றும் தீர்மானிக்கப்பட்டது. இந்த ஜில்லாக்கமிட்டி, கிளை ஸ்தாபனம் இவைகளின்வேலைகள் இன்னின்னவை என்று தீர்மானிக்க போதியநேரம் இல்லாது அன்றிரவு ஒருமணிக்கு மகாநாடு கலைந்தது. மறுநாள் 8—5—33 திங்கட்கிழமை பகல் 10 மணிக்கு கூடி திரும்பவும் ஆலோசித்ததில் பின்னர் கூட்டியிருக்கும் முடிவான தீர்மானங்கள் நிறை வேறின.

8—5—33 திங்கள் கிழமையன்று, நம்மக்களில் சிலர் அவர்கள் ஊரிலுள்ள சிலசிறு விவகாரங்களையும் மகா நாட்டுத் தலைவர் தீர்த்து வைக்க வேண்டும் என்று விண்ணப்பித்துக் கொண்டனர், அவ்வழக்குகளை விசாரிக்கப் புகுந்தால் காலம் இடந்தராதென நினைத்து தலைவர் தனது தனிஹோதாவில் ஆறு அறிஞர்களைத் தெரிந்து எடுத்து அவர்களைக் கொண்டு மகா நாட்டில் விண்ணப் பிக்கப்பட்ட வழக்குகளை ஆராய்ந்து முடிவு கட்டி அவர்கள் கட்டிய முடிவை மகா நாட்டார் எல்லோரும் ஏற்றுக் கொள்வதெனத் தீர்மானித்தார்கள். இவர்களது வழக்குகள் முடிய மாலை 7 மணி ஆயிற்று. மகாநாட்டார் கடைசி முறையாக அன்றிரவு 7-30 மணிக்குத் திரும்பவும் கூடி சமூக முன்னேற்றத்திற்கு வேண்டிய பல தீர்மானங்களையும் நிறை வேற்றி வைத்

தனர். இதன் பின் தலைவர் முடிவுவரை கூறி, வந்திருந் மக்கள் யாவருக்கும், பின்னும் மகாநாட்டின் சிலவுகளைப் பொறுத்துக் கொண்ட திருநெல்வலி, பாளையங்கோட்டை தொண்டைமான் குலமக்களுக்கும், பின்னும் மகாநாட்டில் சிறந்தும் சலியாதுழைத்த பெருமக்களுக்கும் வந்தனம் கூற, கரகோஷத்தினிடையே மகாநாடு அன்றிரவு 10 மணிக்கு முடிவுற்றது. எல்லாம் வல்ல இறைவன் திருவருளால், தொண்டைமான் கள்ளர் முதல் மகாநாடு இனிதே நிறைவேறியது

"கண்டதை விண்டோன்."

---

## மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்கள்.

---

1. நமது மாட்சிமை தங்கிய ஐந்தாம் ஜார்ஜ் சக்கிரவர்த்தியாரும் அவரது மனைவி மேரி மகாராணியாரும் பன்னெடுநாள் வாழவேண்டும் என்று இறைவனை வாழ்த்துவதுடன் இம் மகாநாடு தனது இராஜ விஸ்வாசத்தையும் தெரிவித்துக் கொள்ளுகிறது.

2. நமது குலத்தின் மாபெருந்தலைவரும், புதுக்கோட்டை அரசருமான மாட்சிமை தங்கிய பிரகதாம்பதாச மகாராஜராஜகெம்பீர ராஜகோபாலத் தொண்டைமான் அவர்கள் நீடூழி காலம் வாழ இறைவனை இறைஞ்சுகின்றது.

3. திருநெல்வேலி, மதுரை, இராமநாதபுரம் ஜில்லா வாசிகளான தொண்டைமான் கள்ளர்குல முன்னேற்றத்தை யொட்டி ஒரு ஜில்லாகமிட்டி நியமிக்க வேண்டும் என்றும் அக் கமிட்டியின் தலைமைஆபீஸ் பாளையங்கோட்டையில் அமைக்கப்பட வேண்டும் என்றும் தீர்மானிக்கிறது.

4. ஷ திருநெல்வேலி ஜில்லாவின் கிளை ஸ்தாபனங்கள் கீழே காட்டிய (7) இடங்களிலும் நிறுவப்படவேண்டும் என்றும் ஒவ்வொரு கிளை ஸ்தாபனத்திலிருந்தும் நான்கு பிரதிநிதிகள் ஜில்லாக் கமிட்டியின் அங்கத்தினர்களாக தெரிந்தெடுத்து அனுப்பவேண்டும் என்றும், இவ்வாறு தெரிந்தெடுக்கப்பட்ட 28 பிரதிகளுடன் மகாநாட்டின் தலைவர் 7 அங்கத்தினர்களை அவர்கள் யுக்தம்போல் நியமித்துக் கொள்ளலாமென்றும் ஆகவே இந்த 35 பிரதிநிதிகள் அடங்கிய ஜில்லாக்கமிட்டி, சமூகத்தின் முன்னேற்றத்திற்குரிய வேலைகளைச் செய்து வரவேண்டும் என்றும் தீர்மானிக்கிறது.

1. தென்காசி, சங்கரன் கோவில் சர்க்கிள்.
2. அம்பாசமுத்திரம் ,,
3. பாளையங்கோட்டை ,,
4. திருநெல்வேலி ,,

5. ஸ்ரீவைகுண்டம். சர்க்கிள்.
6. ஸ்ரீவில்லிபுத்தூர்-சாத்தூர் ,,
7. மதுரை ,,

5. இத்துடன் அந்த ஜில்லாக்கமிட்டியின் தலைவர், உதவித்தலைவர், காரியதரிசி, பொக்கிஷதார் முதலிய ஐந்து பேரையும் இந்த 35 அங்கத்தினர்களும் தங்களுக்குள்ளேயே தெரிந்தெடுத்துக்கொள்ளவேண்டும் என்றும், ஷை ஜில்லா கமிட்டி 3 மாசத்திற்கு ஒரு தரம் கூடவேண்டும் என்றும் ஷை ஜில்லா கமிட்டியின் அங்கத்தினர்கள் 2 வருஷத்திர்க்கு ஒரு தடவை புதுப்பிக்கப்படவேண்டும் என்றும் இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

6. ஒவ்வொரு கிளை ஸ்தாபனத்திலும் கீழே காட்டிய விபரப்படி வசூலாகிற நன்மை தீமைப் பணங்களில் 3-ல் ஒரு பங்கை ஜில்லாக்கமிட்டிக்கு கொடுக்க வேண்டும் என்று தீர்மானிக்கிறது.

நன்மை தீமைப் பணங்கள் வசூல் வசூல் செய்ய வேண்டிய விபரம்:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | கல்யாணம் 1 நாள்விசேடத்திற்கு | ரூ | 5 | 0 | 0 |
| 2. | ஷை 2 ஷை | ரூ | 10 | 0 | 0 |
| 3. | தீமை ... .... | ரூ | 2 | 0 | 0 |
| 4. | விதவா விவாகம் .... | ரூ | 10 | 0 | 0 |
| 5. | அத்து மீறின கல்யாணத்திற்கு (கிளைக்கமிட்டி தீர்மானத்துடன்) மாப்பிள்ளைக்கு ரூ 25 பெண்ணுக்கு ரூ 25 | ஆக ரூ | 50 | 0 | 0 |

பணவசூல் அந்தந்த சர்க்கிள் சிருப்பை பொருத்தது. அத்துமீறி அன்னியருடன் போன ஆணுக்கும் பெண்ணுக்கும் ஜில்லாக்கமிட்டி முடிவுப்படி நடத்திக் கொள்ளவும்

7. அந்தந்த சர்க்கிளிலேயுள்ள சிவில் கிரிமினல் விவகாரங்களை, அந்தந்த சர்க்கிளில் உள்ள மெம்பர்கள் அல்லது அவ்வூரில் நியமிக்கப்பட்ட மெம்பர்கள் இருகக்ஷியாரையும் விசாரித்து நியாயம் தெரிந்து தீர்மானித்து முடிவு கட்டிக்கொள்வதென்றும், அப்படி முடிவு கட்டினதில் பாரபட்சமாய் தீர்மானம் கிடைத்தென்று கருதுகிறவர்கள், ஜில்லா கமிட்டி தலைவருக்கு ஷை விவகாரங்களின் தன்மையையும், சர்க்கிள் மெம்பர்களால் தீர்மானிக்கப்பட்ட தீர்மானத்தையும், குறிப்பிட்டு மனுச்செய்து கொள்ளவேண்டும் என்றும், அப்படி அனுப்புகிற ஒவ்வொரு மனுவுக்கும், ஜில்லாக் கமிட்டி தலைவர்பேருக்கு ரூ 1 ஒன்று கட்டணத்தை மணியாடர் மூலமாகவோ அல்லது நேரிலோ

செலுத்த வேண்டும் என்றும், அவ்வித மனுக்களில் கண்ட விவகாரத்தை ஜில்லாக்கமிட்டியார் தீர்மானிக்கிறபடி இருகட்சியாரும் நடந்து கொள்ள வேண்டும் என்றும் இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

8. திருநெல்வேலி, மதுரை, இராமநாதபுரம் ஜில்லாக்களிலுள்ள தொண்டைமான் கள்ளர்களில் தலைக்கட்டுவரிக்கு லாயக்குள்ள ஒவ்வொருவரும் ஜில்லாக்கமிட்டி பொது உடைமைக்கு வருஷம் ஒன்றுக்கு ரூ. 1 ஒன்று வீதம் கொடுக்கவேண்டுமென்றும், அவ்வாறு வசூலித்த தொகையை குலத்தின் பொது நன்மைக்காகவும், குலமக்களை விருத்தி செய்யும் பொருட்டும் உபயோகப்படுத்திக் கொள்ளவேண்டும் என்றும், அந்த தலைக்கட்டு வரியை அந்தந்த சர்க்கிளிலுள்ளவர்களே வசூலித்து ஜில்லாக்கமிட்டிக்கு அனுப்பவேண்டும் என்றும் இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

9. அந்தந்த சர்க்கிளில் நடக்கிற கல்யாணங்களில் மாப்பிள்ளை, பெண், பெயர்களையும் கல்யாணத் தெய்தியையும் ஒரு புத்தகத்தில் சர்க்கிள் மெம்பர் ஒருவர் அவ்வப்போது பதிவு செய்து கொள்ளவேண்டும் என்றும் அவ்வாறு பதிவு செய்ததின் நகல் ஒன்றை ஜில்லா கமிட்டி ஆபீசுக்கு அனுப்பிவைக்க வேண் என்றும் தீர்மானிக்கிறது.

10. ஜில்லா கமிட்டிக்கு 7. சர்க்கிள் களிலுமிருந்து தெரிந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் 28ம் மகாநாட்டின் தலைவரால் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர் 7ம் ஆக அங்கத்தினர் 35ம் கீழ்கண்ட விபரப்படி நியமிக்கப்பட்டிருக்கிறது.

(1) தேன்காசி, சங்கரன்கோவில் சர்க்கிள்.

1. சங்கரன்கோவில். மு. சாமிநாதன்தொண்டைமான்.
2. மலையடிக்குரிச்சி. மாடசாமித்தொண்டைமான்.
3. தென்காசி. தெக்ஷணாமூர்த்தி பல்லவர்.
4. ,, வா. பொன்னையாத்தேவர்.
5. (தலைவரால் நியமனம்) வாசுதேவநல்லூர். நாராயணன் தொண்டைமான்.

(2) அம்பாசமுத்திரம் சர்க்கிள்.

1. விக்கிரமசிங்கபுரம். முத்தையா தொண்டைமான்.
2. அம்பாசமுத்திரம். வீரபத்திர தொண்டைமான்.
3. கல்லிடைக்குரிச்சி. ந. சு. வீரபத்திர தொண்டைமான்.
4. சிங்கிகுளம். பிச்சன் தொண்டமான்.
5. (தலைவரால் நியமனம்) வீரவநல்லூர். அ. பிச்சக்காரத் தொண்டைமான்.

(3) திருநேல்வேலி சர்க்கிள்.

1. வ. பிச்சன் தொண்டைமான்.

2. தொண்டைமான். சி. பி. முத்தையா.
3. மூ. சண்முகத் தொண்டைமான்.
4. சுடலையாண்டித் தொண்டைமான்.
5. (தலைவரால் நியமனம்) நா. வ. சிங்காரவேலுத் தொண்டைமான்.
6. ,, ப. பக்கிரி, தொண்டைமான்.

(4) பாளையங்கோட்டை சர்க்கிள்.

1. அ. அருணைகிரி தொண்டைமான்.
2. சி. நல்லகண்ணுத் தொண்டைமான்.
3. ம. சங்கரன் தொண்டைமான்.
4. ச. சங்கரலிங்கத் தொண்டைமான்.
5. (தலைவரால் நியமனம்) சி. சு. அருணாசலத் தொண்டைமான்.

(5) ஸ்ரீவைகுண்டம், தூத்துக்குடி, சர்க்கிள்.

1. ஸ்ரீவைகுண்டம். பாலையா தொண்டைமான்.
2. ஆத்தூர். ரு. சுடலையாண்டித் தொண்டைமான்.
3. தூத்துக்குடி. ஈ. சுப்பிரமணியத் தொண்டைமான்.
4. பொதியமுத்தூர். அ. முனியாண்டி தொண்டைமான்.
5. (தலைவரால் நியமனம்) ஆழ்வார்திருநகரி. ப. சங்கரந் தொண்டைமான்.

(6) ஸ்ரீவில்லிபுத்தூர், சாத்தூர், சர்க்கிள்.

1. சேத்தூர். ருமசாமித் தொண்டைமான்.
2. ருசபாளையம். சு. மாடசாமித் தொண்டைமான்.
3. சாத்தூர். பே. சுடலைமுத்து தொண்டைமான்.
4. எட்டியாபுரம். சு. பூலான் தொண்டைமான்.
5. (தலைவரால் நியமனம்) சாத்தூர். பொன்னையாத்தேவர்.

(7) மதுரை சர்க்கிள்.

1. மதுரை. ரு. திருவேங்கடம் சேர்வை.
2. செக்கானூரணி. சுப்பையா சேர்வை.
3. சோழவந்தான். சி. சண்முகம் சேர்வை.
4. பெருமாள்பட்டி. முப்பிடாதி சேர்வை.

ஜில்லாக் கமிட்டிக்கு அங்கதினர் மகா சபையாரால் தெரிந்தெடுக்கப்பட்டவர்களின் விபரம்.

1. தலைவர்:— திருநெல்வேலி, தொண்டைமான் முத்தையா அவர்கள்.
2. உதவித்தலைவர்:— பாளையங்கோட்டை, ம. சங்கரன் தொண்டைமான் அவர்கள்.
3. காரியதரிசி:— பாளையங்கோட்டை, சி. நல்லகண்ணு தொண்டைமான் அவர்கள்.
4. உதவிக்காரியதரிசி:— திருநெல்வேலி, வ. சிங்காரவேலு தொண்டைமான் அவர்கள்.
5. பொக்கிஷதார்:— பாளையங்கோட்டை, அ. அருணகிரி தொண்டைமான் அவர்கள்.

11. நம்மில் சிலர் செய்கின்ற சுண்ணாம்புத் தொழிலும், மேளச் தொழிலும் நமது குலத்துக்கடுத்த தொழிலல்ல வென்பதை எல்லோருக்கும் எடுத்துக் காட்டுவதுடன் ஷை தொழில்களை கூடுமானவரையில் நம்மக்கள் விட்டுவிடப் பிரயாசைப் படுவதுடன் இனிமேல் நம்முடைய குழந்தைகளையாவது விவசாயம் மற்றக் கைத்தொழில் முதலியவைகளில் பழக்கிக்கொள்ள ஏற்பாடுகள் செய்யவேண்டும் என்று தீர்மானிக்கிறது.

12. நமது குல மக்களில் மேளம் வாசிப்பவர்கள் தாழ்ந்த ஜாதி மக்களுக்கு மேளம் வாசிப்பதையும், அவர்கள் வீட்டில் உடனிருந்து உண்பதையும் இம்மகாநாடு மிகவும் கடுமையாய்க் கண்டிப்பதுடன் இனிமேல் இத்தகைய காரியங்களை அறவே ஒழித்துவிட வேண்டுமென்றும் தீர்மானிக்கிறது.

13. நமது குல மக்களில் 6 வயதுக்கு மேற்பட்ட ஆண் பெண் இருபாலர்களுக்கும் கட்டாயம் கல்வி போதிக்க வேண்டும் ஏற்பாடுகள் செய்யவும், அதற்கு அரசாங்கத்தார் உதவி பெறவும் இம் மகா நாடு தீர்மானிக்கிறது.

14. நமது குலத்தவர்களுக்குள்ளே நடைபெறும் சுப அசுபச் சடங்குகளில் நம்மவர்கள் அளவுக்கு மிஞ்சி ஆடம்பரச் செலவுகள் செய்யாமல் சுருக்கமாகவே செய்தல் வேண்டும் என்று தீர்மானிக்கிறது.

15. நமது பூர்வ குல அரசர்களாலும், குல மக்களாலும் நிறுவப் பெற்ற தர்ம ஸ்தாபனங்களான, தென்காசி திருச்செந்தூர் முதலிய ஊர்களிலுள்ள மடாலயங்கள் ஜீணித்திருப்பதை கூடிய சீக்கிரம் ரிப்பேர் முதலியன செய்து நல்ல நிலைமைக்கு கொண்டு வர வேண்டும் என்று தீர்மானிக்கிறது.

16. நமது குல மக்கள் பத்திரப் பதிவுக்காவது அல்லது சிவில், கிரிமினல் முதலிய விவகாரங்களுக்காவது அரசாங்கத்தாரிடம் போய் ஜாதியைக் குறிக்கும்பொழுது "தொண்டைமான் கள்ளர்" என்று குறிப்பிட்டு பதிவு செய்து கொள்ளவேண்டுமென்று இம்மகா நாடு தீர்மானிக்கிறது.

17. இந்த மகாநாட்டுத் தீர்மானங்களை தீர்மானங்களில் சம்பந்தப்பட்டவர்களுக்குத் தெரிவிப்பதற்கு மகாநாட்டுத் தலைவருக்கு அதிகாரம் கொடுப்பதுடன், மகா நாட்டு நடவடிக்கைகளையும் தீர்மானங்களையும் அச்சிட்டு எல்லா இடங்களுக்கும் அனுப்பவேண்டுமென்றும் தீர்மானிக்கிறது.

வண்ணார்பேட்டை
8—5—'33.

(ஒப்பம்)
தொண்டைமான் சி. பி. முத்தையா
தோண்டைமான் கள்ளர்,
மகாநாட்டுத் தலைவர்.

## நிர்வாக சபையினர் பொறுப்பு

6. நிர்வாக சபை அங்கத்தினர் ஒவ்வொரு இங்கிலீஷ் மாதம் இரண்டாம் ஞாயிற்றுக் கிழமையன்று திருநெல்வேலியிலோ அல்லது பாளையங்கோட்டையிலோ காரியதரிசி அறிவிக்கும் இடத்தில் கூடவேண்டும்.

7. தலைவர் நிர்வாக சபைக் கூட்டங்களுக்கும், ஜில்லா கமிட்டி அங்கத்தினர் கூட்டங்களுக்கும் தலைமை வகித்து வேண்டும் காரியங்களை நிறைவேற்றிவைக்கவேண்டும். பொறுப்புள்ள காரியங்களில் கடிதப் போக்குவரவெல்லாம் அவர்களைச் சேர்ந்ததாகும்.

8. காரியதரிசி மாதமொருமுறை நிர்வாக சபையைக் கூட்டவும், மூன்று மாதத்திற் கொருமுறை ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர் கூட்டத்தைக் கூட்டவும் ஏற்பாடு செய்வதுடன் அக் கூட்டங்களில் தீர்மானிக்க வேண்டிய விஷயங்களைத் தொகுத்து அங்கத்தினர் எல்லோரும் முன் கூட்டி அறிவிக்க வேண்டும். ஜில்லாக் கமிட்டியின் வரவு செலவு கணக்குகளை அவ்வப்போது ஒரு புத்தகத்தில் பதிவு செய்து மாதம் ஒருமுறை கூடும் நிர்வாக சபை அங்கத்தினர் அங்கீகாரம் பெற்றுக்கொள்ளவேண்டும். மற்றும் கடிதப்போக்கு வரவையும் அவரே நடத்த வேண்டும்.

9. உதவித்தலைவரும், உதவிக்காரியதரிசியும் முறையே தலைவருக்கும், காரியதரிசிக்கும் எல்லாக் காரியங்களிலும் உதவி செய்ய வேண்டும்.

10. பொக்கிஷதார் செய்யும் எந்தச் செலவுக்கும் நிர்வாகசபை அங்கத்தினர் 5 பேரிடம் சம்மதம் பெற்றுக்கொள்ள வேண்டும். அவரிடம் ரூ 50 க்கு மேல் சேர்ந்த பொழுது அப்படிச் சேர்ந்த பணத்தை ஜில்லாக் கமிட்டியின் தலைவர் பெயருக்கு போஸ்டாபீஸ் சேவிங்ஸ் பாங்கில் போட்டு விடவேண்டும்.

## ஜில்லா கமிட்டி அங்கத்தினர் பொறுப்பு.

---

11. ஜில்லாக்கமிட்டி அங்கத்தினர்கள் எல்லோரும் மூன்று மாதத்திற்கு ஒருதடவை நடக்கும் கூட்டத்திற்கு வந்து நிர்வாகசபை அங்கத்தினர்கள் செய்த தீர்மானங்களை உறுதிப் படுத்தவேண்டும்.

12. ஒவ்வொரு கிளை ஸ்தாபனத்திலும் வசூலாகிற பொதுப்பணத்தில் மூன்றில் ஒரு பங்கைக் கூடுமானவரையில் அவ்வப்போதே ஜில்லாக்கமிட்டி பொக்கிஷதாருக்கு அனுப்பி வைக்க வேண்டும். தவறினால் ஜில்லாக்கமிட்டி மூன்று மாதத்திற்கு ஒரு தரம் கூடுகின்றபொழுதாவது கிளைஸ்தாபன அங்கத்தினர்கள், அதுவரை வசூலான தொகை முழுவதையும் பொக்கிஷதாரிடம் தந்து ரசீது பெற்றுக்கொள்ள வேண்டும்.

13. ஜில்லாக்கமிட்டி அங்கத்தினர்கள் தகுந்த காரணமில்லாமல் தொடர்ச்சியாய் மூன்று கூட்டங்களுக்கு வராமல் இருந்தால் அவர்களை ஜில்லாக்கமிட்டி அங்கத்தினர் பதவியிலிருந்து நீக்கிவிடுவதற்கு, தலைவருக்கு அதிகாரம் உண்டு.

14. அவ்வாறு நீக்கப்பட்ட அங்கத்தினர் காலிஸ்தானங்களுக்காவது, அல்லது வேறு விதமாக ஏற்பட்ட காலிஸ்தானங்களுக்காவது, மெம்பர்கள் நியமித்துக் கொள்ள தலைவருக்கு அதிகாரம் உண்டு.

15. ஜில்லாக்கமிட்டி சம்பந்தமான விஷயங்களையும், வேறு மனுக்களையும், தலைவர் பெயருக்கு எழுதவேண்டும்.

தலைவர் விலாசம்:—

**தொண்டைமான். சி. பி. முத்தையா,**

குற்றாலரோட்,

திருநெல்வேலி டவுண்.